உ

கணபதி துணை.

# சிதம்பரமான்மியம்.

யாழ்ப்பாணத்து நல்லூர்

## ஆறுமுகநாவலரவர்கள்

செய்தது.

சிதம்பரசைவப்பிரகாசவித்தியாசாலைத்

தருமபரிபாலகர்களால்

சென்னபட்டணம்

வித்தியாநுபாலனயந்திரசாலையில்

அச்சிற்பதிப்பிக்கப்பட்டது.

எட்டாம் பதிப்பு.

ஆங்கிரஸ௵ மாசிமீ.

இதன்விலை அணா - ௨.

உ

கணபதி துணை.

# சிதம்பரமான்மியம்.

யாழ்ப்பாணத்து நல்லூர்

ஆறுமுகநாவலரவர்கள்

செய்தது.

சிதம்பரசைவப்பிரகாசவித்தியாசாலைத்

தருமபரிபாலகர்களால்

சென்னபட்டணம்

வித்தியாநுபாலனயந்திரசாலையில்

அச்சிற்பதிப்பிக்கப்பட்டது.

எட்டாம் பதிப்பு.

ஆங்கீரச௵ மாசி௴

## சூசீபத்திரம்.

கணபதி துணை.

# சிதம்பரமான்மியம்.

## க. சிதம்பரமகிமைச்சருக்கம்.

எல்லாவறிவும் எல்லாமுதன்மையும் எல்லாவநுக்கிரகமும் உடைய முழுமுதற்கடவுள் தாம் ஒருவரேயாய்ப், பசுக்களாகிய ஆன்மாக்களெல்லாந் தமக்கு என்றும் உடைமைப் பொருள்களேயாகத் தாம் என்றும் உடையவராயே நின்று, பசுபதி எனப்படுஞ் சிவபெருமான், பிரபஞ்சம் எங்குமாகி, நீக்கமற வியாபித்து நிற்பர்; ஆயினும், அவ்வுண்மை யாவருக்கும் விளங்காது; ஆதலினாலே, முத்தியடைதல் எளிதன்று. இதனைச் சிவபெருமானே திருவுளங்கொண்டு, தம்மை ஆன்மாக்கள் வழிபட்டுய்யும்பொருட்டு, எண்ணில்லாத முக்கியஸ்தலங்களைப் பூமியில் வைத்தருளினார். அவைகளுள்ளே, அறுபத்தெட்டுத் தலங்கள் சிறந்தன; அவ்வறுபத்தெட்

டுத் தலங்களுள்ளே, ஆறுதலங்கள் சிறந்தன; அவ்வாறுதலங்களுள்ளே, திருவாரூர் காசி சிதம்பரம் என்னும் மூன்றுதலங்கள் சிறந்தன. திருவாரூரிலே பிறந்தவர்களும், காசியிலே இறந்தவர்களும், சிதம்பரத்திலே சிவபெருமானுடைய திருவடிகளைத் தரிசித்தவர்களும், முத்தியை அடைவர்கள்.

திருவாரூரிலே பிறத்தல், முன்செய்த புண்ணியமிகுதியினாலே, தானே நேர்படினல்லது, செயற்கையால் அடையத்தக்கதன்று. காசியில் இறக்கலாமெனின், பிறர்பொருள் கொள்ளாது, பாவத்துக்குப் பயந்து தருமநெறியினாலே சம்பாதித்த பொருள் கொண்டு, சென்மதேசத்தை விடுத்து, வழியிலே இறவாது உயிர்தாங்கிச் சென்று, காசியை அடைந்து, இறக்கும்வரையும் நல்லொழுக்கத்தோடும் அத்திருப்பதியில் இருந்து, இறப்பது எளிதின்முடிவதன்று. சிதம்பரத்திலோவெனிற் சிவபெருமானுடைய திருவடிகளைத் தரிசித்தமாத்திரத்தே முத்தி சித்திக்கும். இன்னும், தக்கிணதேசத்தார் சிதம்பரத்தை நீங்கி முத்தியைத் தேடிக் காசியிலே சென்றால், அது முத்தியைக் கொடுப்பதில்லை; உத்தரதேசத்தார் சிதம்பரம் முத்திதரும் என்று

வந்து சேர்ந்தால், இது முத்தியைக் கொடுக்கும். ஆதலினாலே, சிதம்பரமே எல்லாத் தலங்களி னுஞ் சிறந்தது.

பிண்டமும் பிரமாண்டமுஞ் சமம். பிண்ட மாகிய சரீரத்தில் இடப்பக்கநாடியாகிய இடைக் கும் வலப்பக்கநாடியாகிய பிங்கலைக்கும் நடுவில் உள்ள சுழுமுனாநாடியும், பிரமாண்டத்தில் உள்ள இப்பரதகண்டத்தில், இலங்கைக்கும் இமயமலை க்கும் நடுவில் உள்ள தில்லையும், சிவபெருமான் ஆனந்த நிருத்தஞ்செய்யுந் தானமாம்.

சரீரம் பிரமபுரம்; சரீரத்தினுள்ளே இருக் கும் இருதயத்தானந் தகரமாகிய புண்டரீகவீடு; இருதயத்தானத்தினுள்ளே இருக்கும் பிரமமா கிய சிவம் ஆகாசம். புறத்தும், இப்படியே, பிர மாண்டம் பிரமபுரம்; பிரமாண்டத்தினுள்ளே இருக்குந் தில்லைவனம் புண்டரீகவீடு; தில்லை வனத்தில் நிருத்தஞ்செய்யுஞ் சிவம் ஆகாசம். இவ்வாகாசம் பூதாகாசம்போற் சடமாகாது சித் தேயாம்; ஆதலாற் சிதம்பரமெனப்படும். இச் சிதம்பரம் எக்காலமும் நீக்கமின்றி விளங்குந் தானமாதலால், இத்தில்லையுஞ் சிதம்பரம் எனப் பெயர்பெறும்.

சிதம்பரத்திலே, ஞானசபையிலே, சிவபெருமான், சிவகாமியம்மையார் காண, ஆன்மாக்கள்பொருட்டு அனவரதமும் ஆனந்தநிருத்தஞ் செய்தருளுவர். சபாநாயகர், கோடிசூரியருடைய ஒளிபோலும் ஒளியும், திருப்புன்முறுவலையுடைய ஒருதிருமுகமும், மூன்று திருக்கண்ணும், கங்கையையும் பிறையையுங் கொன்றைமாலையையுந் தாங்கிப் பின்றூங்காநின்ற திருச்சடையும், சங்கக்குண்டலம் பொருந்திய வலத்திருச்செவியும், திருத்தோடுபொருந்திய இடத்திருச்செவியும், திருநீலகண்டமும், டமருகம்பொருந்திய திருக்கரம் அபயகரம் என்னும் வலத்திருக்கரம் இரண்டும், அக்கினியகல் பொருந்திய திருக்கரம் டோளகரம் என்னும் இடத்திருக்கரம் இரண்டும், புலித்தோலை ஆடையாகக்கொண்டு கச்சையுடைத்தாய் நெறிப்புப் பொருந்தி விளங்குந் திருவரையும், முயலகன்மேல் ஊன்றிய வலத்திருப்பாதமும், தூக்கி வளைத்த இடத்திருப்பாதமும் உடையர். சிவகாமியம்மையார், பச்சைநிறத் திருமேனியும், திருக்கழுத்திலேபொருந்திய திருமங்கலசூத்திரமும், செங்கழுநீர்மலர்பிடித்த வலத்திருக்கையும், கடிக்கீழ்த்தொங்கவிட்ட இடத்திருக்கையும், மிக ஒடுங்கிய திருநிலையும் உடையர்.

சபாநாயகருடைய வடிவம் ஸ்ரீபஞ்சாக்ஷர வடிவம்; வாச்சியமந்திரமாகிய சிவசத்தி அவருக்கு உண்மை வடிவம்; வாசகமந்திரம் அவருக்குக் கற்பிதவடிவம். அவருடைய ஆனந்த நிருத்தம் பஞ்சகிருத்தியம். சிருட்டிகிருத்தியம் டமருகத்தினும், திதிகிருத்தியம் அபயகரத்தினும், சங்காரகிருத்தியம் அக்கினியினும், திரோபவகிருத்தியம் ஊன்றிய பாதத்தினும், அநுக்கிரககிருத்தியங் குஞ்சிதபாதத்தினுந் தோன்றும். அவ்வானந்த நிருத்தத்துக்கு நிலைக்களமாகிய சபை சிவசத்தியால் அதிட்டிக்கப்பட்ட சுத்த மாயாமயம். சிவசத்தி, அக்கினியோடு சூடுபோலச் சிவத்தோடு நீக்கமின்றி உள்ள திருவருள்.

வியாக்கிரபாதமுனிவர், பதஞ்சலிமுனிவர், உபமன்னியு முனிவர், திருவுடையந்தணர்கள், வியாசமுனிவர், சுகமுனிவர், சௌனகமுனிவர், சைமினிமுனிவர், சூதமுனிவர் முதலாயினோர் எண்ணிறந்தோர்கள், சிதம்பரத்திலே நியமமாகச் சிவகங்கையிலே ஸ்நானஞ்செய்து, நடேச பெருமானுடைய ஆனந்தநிருத்தத்தைத் தரிசித்து வணங்கித் துதித்துச் சிவானந்தப் பெருவாழ்வு அடைந்தார்கள். உபமன்னியுமுனிவர்

கிருஷ்ணருக்குச் சிவதீக்ஷை செய்து சிவபூசை எழுந்தருளப்பண்ணிக்கொடுத்த சைவாசாரியர். சைமினிமுனிவர் நடேசபெருமானை வேதபாதஸ்தவத்தினாலே துதித்தவர். வேதபாதஸ்தவமாவது முதன்மூன்றுபாதமுந் தமது வாக்காகவும் நான்காம்பாதம் வேதமாகவுஞ் செய்யப்பட்ட தோத்திரம். [ஸ்தவம் - தோத்திரம்.]

பரங்கருணைத் தடங்கடலாகிய நடேசபெருமானுடைய இலக்கணங்களை உண்மைநூல்வாயிலாக அறிந்து, நல்லொழுக்கத்தின் வழுவாது நிலை கொண்டு, அவருடைய விளக்கத்துக்கு இடமாகிய திருவுருவை, விராட்புருடனாகிய பிரமாவினது பிரமாண்டசரீரத்தின் இருதயகமலமாகிய தில்லையிலே, நாடோறும் விதிப்படி அன்போடு தரிசித்துக்கொண்டு வந்தவர், அந்நடேசபெருமானைத், தமது பிண்ட சரீரத்தினது இருதயகமலமாகிய தகரத்திலே தியானித்துத் தரிசித்துப், பாசநீங்கி முத்தி அடைவர். இதுவே தகரவித்தை. தகரவித்தை சாந்தோக்கியோபநிடதத்திலுங் கைவல்லியோபநிடதத்திலும் பேசப்பட்டது.

சிதம்பரத்துக்குச், சிதம்பரமான்மியம், புண்டரிகபுரமான்மியம், வியாக்கிரபுரமான்மியம், ஏம

ச்பாமான்மியம், தில்லவனமான்மியம் என வட மொழியில் ஐந்துமான்மியங்கள் உள்ளன.

திருச்சிற்றம்பலம்.



## உ. வியாக்கிரபாதச்சருக்கம்.



மத்தியந்தினமுனிவர், தம்முடைய குமாரருக்குச், சிவபுண்ணியங்களெல்லாவற்றுள்ளுஞ் சிறந்தது சிவலிங்கபூசை என்றும், சிவஸ்தலங்களெல்லாவற்றுள்ளுஞ் சிறந்தது சிதம்பரமாகிய தில்லைவனம் என்றும், போதித்தார். அது கேட்ட குமாரர், தந்தையாருடைய அநுமதி பெற்றுக்கொண்டு, தெற்கு நோக்கி நடந்து சென்று, தில்லைவனத்தை அடைந்து, அதனுள்ளே சிவகங்கை என்னுஞ் சிவதீர்த்தத்தையும், அதற்குத் தெற்கே ஓராலமரநிழலிலே திருமூலட்டானேசுரர் என்னுஞ் சிவலிங்கப்பெருமானையுந் தரிசித்து வணங்கி, நாடோறும் அத்தீர்த்தத்திலே ஸ்நானஞ்செய்து, அச்சிவலிங்கப் பெருமானைப் பூசை செய்துகொண்டு வந்தார். சில நாளாயபின்பு, திருமூலட்டானேசுரருக்கு மேற்கே ஒரு திருக்குளத்தைக் கண்டு, அதற்கு

மேற்கே ஒருசிவலிங்கந்தாபித்து, அதற்குச் சமீபத்திலே ஒரு பர்ணசாலை செய்து, இருசிவலிங்கத்தையும் பூசைசெய்துகொண்டு, அப்பர்ணசாலையில் இருந்தார்.

இப்படியிருக்குநாளிலே ஒருநாள், அப்பாலமுனிவர்: "பூக்களை விடிந்தபின் எடுக்கலாமெனின் வண்டூதும்; விடியுமுன் எடுக்கலாமெனின் வழி தெரியாது, பழுது தெரியாது; மரங்களிலேறிற் கைகால்கள் பனியினுல் வழுக்கும்; பழுதில்லாத பூக்கொண்டு சிவபூசை செய்தற்கு யாது செய்வேன்!" என்று தளர்ந்தார். உடனே சிவபெருமான் இடபவாகன மேற்கொண்டெழுந்தருளிவந்து: "நீ விரும்பிய வரம் யாது?" என்று வினவியருள, அப்பாலமுனிவர்: "எம்பெருமானே! அடியேன் மரங்களிலே வழுக்காமற் பற்றியேறுதற்கு அடியேனுடைய கால்களுங் கைகளும் புலிக்கால்களையும் புலிக்கைகளையும் போல வலிய நகப்பற்றுடையவைகளாய் இருக்கும்பொருட்டும், வழி பார்த்து நடத்தற்கும் பூக்களைப் பழுது பார்த்தெடுத்தற்கும் அக்கால்களினுங்கைகளினுங் கண்கள் பொருந்தும்பொருட்டும், அருள்செய்யும்" என்று பிரார்த்தித்தார். சிவபெருமான், அவர் வேண்டுகோளுக்கு

அருள் செய்து, மறைந்தருளினர். பாலமுனிவர், அன்று முதல் வியாக்கிரபாதர் என்னும் பெயரையுடையராய், நாடோறும் விடியுமுன் நியதிமுடித்துக், கோட்டுப்பூக் கொடிப்பூ நிலப்பூ நீர்ப்பூ என்னும் நால்வகைப் பூக்களையும் எடுத்துச், சிவாகமவிதிப்படி சிவபூசை செய்து கொண்டு, எண்ணில்காலம் இருந்தார்.

இப்படியிருந்த வியாக்கிரபாதமுனிவரைத், தந்தையாராகிய மத்தியந்தினமுனிவர் வந்து, கண்டு, மகிழ்ந்து, சிவகங்கையிலே ஸ்நானஞ் செய்து, திருமூலட்டானமுடையாரையும் திருப்புலீச்சுரமுடையாரையும் பூசைசெய்துகொண்டு, அம்முனிவருடைய பர்ணசாலையில் இருந்தார். இருக்குநாளிலே, வியாக்கிரபாதமுனிவர், தந்தையாருடைய அநுமதிப்படி, வசிட்டமுனிவருடைய தங்கையாரை விவாகஞ்செய்து உபமன்னியு என்னும் ஒருசற்புத்திரரைப்பெற்றார். அப்புத்திரரை, வசிட்டமுனிவருடைய மனைவியாராகிய அருந்ததியார், தம்முடைய ஆச்சிரமத்துக்குக் கொண்டுபோய்க், காமதேனுவினது பாலையூட்டி வளர்க்குநாளிலே, வியாக்கிரபாதமுனிவர், அப்புத்திரரைத் தமது பர்ணசாலையிலே கொணர்வித்து, அவருக்குக் கிழங்கு பழமுத

வியவற்றையுஞ் சலத்திற் கரைத்த மாவையுங் கொடுக்க, அவர் அவைகளை உட்கொள்ளாது உமிழ்ந்துவிட்டுக், காமதேனுவின் பாலை விரும்பி அழுதார். வியாக்கிரபாதமுனிவர், அப்புத்திரரைத் திருமூலட்டானமுடையார் சந்நிதியிலே வளர்த்திவிட, அவர் பசிமிகுதியால் அழுது, சிவபெருமானுடைய திருவருளினாலே திருப்பாற்கடலைப் பெற்றுப், பருகி வளர்ந்தார்.

ஒருநாள் வியாக்கிரபாதமுனிவர், திருமூலட்டானேசுரர் சந்நிதியிலே சிவயோகத்தில் இருந்தபொழுது, தேவதாருவனத்திலே சிவபெருமான் நாற்பத்தெண்ணாயிர முனிவர்களுக்குத் திருநிருத்தஞ் செய்தருளினமையை அறிந்து, அந்நிருத்த தரிசனத்தில் ஆசைமிக்குடையராகி, அந்நிருத்தத்துக்கு இடமாகிய தேவதாருவனமே தமக்கு உறைவிடமாகத் தந்தையார் கற்பியாதொழிந்தமையை நினைந்து தளர்ந்து, பின்பு தெளிந்து, சிதம்பரதலந் திருநிருத்தத்தைத் தரும் என்று துணிந்து, அதனைத்தரிசிப்பித்தருளும்படி சிவபெருமானைப் பூசை செய்துகொண்டிருந்தார்.

திருச்சிற்றம்பலம்.



# ௩. பதஞ்சலிச்சருக்கம்.

ஒருநாள் விட்டுணு, ஆதிசேஷராகிய சயனத்தின்மீது செய்யு நித்திரையை விட்டெழுந்து, கைகள் சிரசின்மேலே குவிய, ஆனந்த வருவி பொழிந்து, சிவானந்த பரவசராய் இருந்து, பின்பு சயனத்தினின்று நீங்கி, நித்திய கருமமுடித்துக்கொண்டு, சிங்காசனத்தின்மேல் வீற்றிருந்தருளினர். அப்பொழுது ஆதிசேஷர் அவரை வணங்கி; "எம்பெருமானே! நீர் அடியேன்மீது முன்புபோலச் சயனித்துப் பின் விழியாது இப்படி எழுந்தருளியிருந்தமை என்னை!" என்று வினவ, விட்டுணு சொல்வாராயினர்:—

"ஆதிசேஷா! நேற்றுச் சிவபெருமான், தாம் பிக்ஷாடனவடிவங்கொண்டு, என்னை மோகினி வடிவங் கொள்வித்து, என்னோடு தேவதாருவனத்துக் கெழுந்தருளிப், பிக்ஷையேற்பாராயினர். அங்குள்ள நாற்பத்தெண்ணாயிரமுனிவர்கள் என்னைக் கண்டு மோகிக்க, அவர்களுடைய பன்னியர்கள், சிவபெருமானைக் கண்டு மோகித்தார்கள். அஃதறிந்த முனிவர்கள் சிவபெருமான்மீது பலசாபங்களிட, அவை பயன்படாதொழிந்தன. அதன்பின் முனிவர்கள் அபிசார ஹோமஞ் செய்தார்கள். சிவபெருமான் அம்

முனிவருடைய குண்டத்தக்கினியினின்றும் முதற்கண்ணே தோன்றி வந்தபுலியைப் பிடித்துரித்துத் தோலையுடுத்துக்கொண்டார்; பின்பு தோன்றிவந்த பூதங்களைத் தமக்கு அடிமைகளாக்கிக் கொண்டார்; பின்பு தோன்றிவந்த ஒரு சருப்பத்தைத் தமது திருக்கரத்திலே கடகமாக அணிந்துகொண்டார்; பின்பு தோன்றிவந்த குறள் வடிவினதாகிய முயலகனெதிரே பாய்ந்து, அதன் முதுகு நெரியும்படி அதன் மேலே வலப்பாதத்தினாலே மிதித்துக்கொண்டார்; பின்பு விடுக்கப்பட்டு வந்த அக்கினியைத் திருக்கரத்தில் ஏந்திக்கொண்டார்; பின்பு விடுக்கப்பட்டு வந்த மந்திரங்களைத் திருவடியிலே திருச்சிலம்புகளுக்குத் தரிசாகச் சாத்திக்கொண்டார். இவ்வாறு செய்தபின், சிவபெருமான் அந்நாற்பத்தெண்ணுயிரமுனிவர்களுக்கு அநுக்கிரகிக்கத் திருவுளங்கொண்டு, ஆகாயமார்க்கமாக இடபவாகனத்தோடு வந்த உமாதேவியார் தமதிடப்பக்கத்திலே பொருந்தி நிற்க, நான் மோகினி வடிவம் நீங்கி முன்னைவடிவங்கொண்டு வணங்கி யொடுங்கப், பிரமன் இந்திரன் முதலிய தேவர்களும் முனிவர்களுஞ் சேவிக்கத், திருநிருத்தஞ் செய்தருளினர். நாற்பத்தெண்ணுயிர முனிவர்

கள், தங்கள் ஆணவமலசத்திகளெல்லாங் கூடி வந்து ஆணவ மூலமாகிய முயலகனைப் பொருந் தத், தாங்கள் நிருத்ததரிசனஞ்செய்து, சிவா னந்தபரவசர்களாயினார்கள். சிவபெருமான் எல் லார்மீதுந் திருக்கண்சாத்தி: "நீங்கள் நமது நிரு த்தத்தைச் சிவலிங்கத்திலே தியானித்து வழி படுங்கள்" என்று பணித்துவிட்டு, உமாதேவி யாரோடும் இடபவாகனமேற்கொண்டு மறைந் தருளினார். மறைந்தருளிய திக்குமுன்னாக வண ங்கி எல்லாரும் அகன்றபின், நான் நேற்று உன் மீது சயனித்தும், நிருத்தானந்தத்தினாலே நித் திரையையொழிந்தேன்" என்றார்.

இப்படி விட்டுணு சொல்லிய வார்த்தையை ஆதிசேஷர் கேட்டு, நிருத்ததரிசனத்தின்மீது பேராசையையுடையராய், அநுமதிபெற்றுக்கொ ண்டு, திருக்கைலாசமலைப்பக்கத்தை அடைந்து, சிவபெருமானைக் குறித்து எண்ணில்காலந் தவஞ் செய்தார். சிவபெருமான் இடபவாகன மேற் கொண்டு வெளிப்பட்டு, அவ்வாதி சேஷரைத் தழுவி, அவர்தலைமீது தமது திருக்கரத்தை வைத்துத் திருவாய்மலர்ந்தருள்வாராயினார்:—

"அன்பனே; "பஞ்சகிருத்தியமே நமக்கு நிருத்தமாகும். நாங் தேவதாருவனத்திலே

வெளிப்பட நின்று நிருத்தஞ் செய்தபொழுது, அவ்வனம் அதனைப் பொறுக்கமாட்டா தசைந்தது; அதனாலே நிருத்தத்தை விரைவில் ஒழித்து விட்டேம். உனக்கு இங்கே நிருத்தங்காட்டுவேமெனின், இவ்வனமும் அதனைப் பொறுக்கவல்லதன்று. நமது நிருத்தத்தைப் பொறுக்கவல்லது தில்லைவனம். அந்தத் தலத்திலே மூலலிங்கம் இருக்கின்றது. அதற்குத் தெற்கே ஒரு சபையுண்டு. அங்கே நாம் எக்காலமும் நிருத்தஞ் செய்தருள்வேம். நீ அங்கே இவ்வடிவத்தோடு போவாயாயின், உன்னுயிரம் படங்களையுங் கண்டு உலகம் பயப்படும். நெடுங்காலத்துக்கு முன் அத்திரிமுனிவனும் அவன்மனைவியாகிய அனசூயையும் உன்னைப் பிள்ளையாகப் பெற விரும்பி விட்டுணுவைநோக்கித் தவஞ்செய்தார்கள். அவ்வனசூயை இருது மதியாய் ஸ்நானஞ் செய்து கரையேறியபொழுது, நீ அவளுடைய அஞ்சலியிலே ஐந்துதலை பொருந்திய ஒரு சிறு பாம்பாய்ப் பொருந்த, அவள் பயத்தினாலே கைவிட, நீ விழுந்து பதஞ்சலி என்னும் பெயர்பெற்றாய். இப்பொழுதும் நீ அவ்வடிவமும் அப்பெயருங் கொண்டு நாகலோகத்துக்குப் போ. அங்கே ஒரு பருவதமும் அதற்குத் தெற்கே ஒரு பிலத்து

வாரமும் உள்ளன. அப்பிலத்துவாரத்தின் முடிவு தில்லைவனம். அப்பிலத்துவாரம் நீங்க, அதற்கு வடபக்கத்திலே, ஓராலமரநிழலிலே, அப்பருவதத்தின் கொழுந்து மூலலிங்கமாய் இருக்கும். வியாக்கிரபாதமுனிவன் நமது நிருத்தத்தைத் தரிசிக்க விரும்பி, அவ்விலிங்கத்தைப் பூசைசெய்துகொண்டிருக்கின்றான். நீயும்போய், அவனோடிரு. தைப்பூசம் வியாழக்கிழமையோடு கூடுஞ் சித்தயோகதினத்து மத்தியானத்திலே, நாம் உங்களுக்கு ஆனந்த நிருத்தங் காட்டியருள்வோம்'' என்று திருவாய்மலர்ந்து மறைந்தருளினார்.

சிவபெருமான் மறைந்தருளிய திக்குக்கு நேராக ஆதிசேஷர் வணங்கியெழுந்து, பதஞ்சலி வடிவங்கொண்டு, நாகலோகத்துக்குப்போய், அங்கே பாதாளமேழையும் உருவிநின்ற ஞானமயமாகிய பருவதத்தை வணங்கி, அதற்குத் தென்பக்கத்துள்ள பிலத்துவாரம் வாயிலாகப் பூலோகத்தில் ஏறித், தில்லைவனத்தை அடைந்து, அங்கே வியாக்கிரபாதமுனிவரைக் கண்டு, அவருக்குத் தம்முடைய வரலாறெல்லாஞ்சொல்லிச், சிவகங்கையிலே ஸ்நானஞ்செய்து, திருமூலட்டானமுடையாரையுந் திருப்புலீச்சுரமுடையா

ரையும் பூசை செய்துகொண்டிருந்தார். சிலநாளாயபின்பு, தில்லைவனத்தின் மேல்புறத்தில் ஒரு வாவியைக்கண்டு, அதன் கீழ்கரையிலே ஒரு சிவலிங்கந் தாபித்து, அவ்வாவியின் வடபக்கத்திலே ஒரு பர்ணசாலை செய்து, மூன்று சிவலிங்கத்தையும் பூசை செய்துகொண்டு, அதிலிருந்தார். இருக்குநாளிலே, திருநிருத்த தரிசனத்தின்பொருட்டு, எண்ணில்லாதவர்கள் புதுமை புதுமையாக வந்து கூடினார்கள். நிருத்ததரிசனத்தின்பொருட்டு முன்னே வந்திருந்த திருவுடையந்தணர் மூவாயிரவரும் இவர்களோடு வந்து சேர்ந்தார்கள்.

திருச்சிற்றம்பலம்.



## ச. நடராசச்சருக்கம்.



தைப்பூசம் வியாழக்கிழமையோடு கூடுஞ் சித்தயோகதினம் வர, அன்று மத்தியானத்திலே, ஆயிரமுகத்தையுடைய பானுகம்பர் ஆயிரஞ்சங்கூத, ஆயிரந்தோளையுடைய வாணாசுரன் குடமுழா ஒலிப்பிக்க, பஞ்சதுந்துபியொலியும் வேதவொலியுங் கந்தருவருடைய கீதவொலியும்

மிக்கெழ, ஞானசபையிலே சிவபெருமான் உமாதேவியாரோடு நின்று, ஆனந்தநிருத்தஞ் செய்தருளினர். வியாக்கிரபாத முனிவர் பதஞ்சலி முனிவர் என்னும் இருவரும், பிரமா விட்டுணு முதலிய தேவர்களும், திருவுடையந்தணர் மூவாயிரரும், பிறரும், சிவபெருமானுடைய திருவருளினாலே, ஞானக்கண்ணைப் பெற்று, அவருடைய ஆனந்த தாண்டவத்தைத் தரிசித்து, உரோமஞ் சிலிர்ப்ப, நெஞ்சநெக்குருகக், கண்ணீர் பொழியச், சிவானந்தமாக்கடலின் மூழ்கினர்கள். பதஞ்சலிமுனிவர்: "எம்பெருமானே! இந்த ஞான சபையிலே உமாதேவியாரோடு இன்றுமுதல் எக்காலமும் ஆன்மாக்களுக்கு ஆனந்தநிருத்தத்தைப் புலப்படுத்தியருளும்" என்று வேண்டிக்கொண்டார். அதற்குச் சிவபெருமான் உடன்பட்டருளினர்.

சிவபெருமான் பணித்தருளியபடியே, தேவர்கள் அந்த நிருத்தஸ்தானத்தை வளைத்து, உயர்ந்த பொன்னினாலே ஒரு மகாசபை செய்தார்கள். சிவபெருமான், அன்று தொடங்கித் தேவர்களும் வியாக்கிரபாதமுனிவர் பதஞ்சலி முனிவர் முதலாயினோரும் வணங்கச், சிவகாமியம்மையாரோடும் கனகசபையிலே எக்காலமுந்

திருநிருத்தத்தைத் தரிசிப்பித் தருள்வாரா யினர்.

இங்கே எல்லாரும் நிருத்த தரிசனஞ்செய்து கொண்டிருக்குநாளிலே, பிரமதேவர், கங்கைக் கரையிலுள்ள அந்தர்வேதியிலே ஒரு யாகஞ் செய்யத் தொடங்கிக்கொண்டு, தில்லைவாழந்த ணர்களையுந் தேவர்களையும் அழைத்துக்கொண்டு வரும்பொருட்டு, நாரதமுனிவரைத் தில்லைவன த்துக்கு அனுப்பினர். அந்நாரதமுனிவருடைய சொல்லைக் கேட்ட தேவர்களும் அந்தணர்களும்: "இங்கே ஆனந்தநிருத்தமாகிய அமிர்தத்தை உண்ணும் நாங்கள் இனி உங்கள் அவியை உண் ணோம்" என்றார்கள். அதனை, நாரதமுனிவர் சென்று, பிரமதேவருக்கு விண்ணப்பஞ்செய்ய, அப்பிரமதேவர் தாமே சென்று, தில்லைவன த்தை அடைந்து, சிவகங்கையிலே ஸ்நானஞ் செய்து, திருநிருத்தத்தைத் தரிசித்துச், சிவலிங் கத்தை வணங்கி, வியாக்கிரபாத முனிவரிடத்தே போய், அவர்வாயிலாகத் தில்லைவாழந்தணர்களை யுந் தேவர்களையும் உடன்படுத்தி, அந்தர்வேதி க்கு அழைத்துக்கொண்டு போய்த், தமதியாக த்தை முற்றுவித்தார். வியாக்கிரபாதமுனிவரும்

பதஞ்சலிமுனிவரும், நிருத்ததரிசனஞ் செய்து கொண்டு, தில்லைவனத்தில் இருந்தார்கள்.

திருச்சிற்றம்பலம்.



## ரு. இரணியவன்மச்சருக்கம்.



பிரமாண்டம் படைக்கப்பட்டபொழுது, சூரியனுக்கு, மனு, இயமன் என இரண்டு குமாரர்கள் தோன்றினார்கள். பூமியிலே வெளிப்படப் பாவஞ் செய்தவரை இம்மையிற்றானே தண்டித்தற்கு மனுவும், வெளிப்படாமற் பாவஞ் செய்தவரை மறுமையிலே நரகத்திலே தண்டித்தற்கு இயமனும், சிவபெருமானாலே, நியோகிக்கப்பட்டார்கள்.

மனு, இமயமலைக்குத் தெற்கே உள்ளகௌடதேசத்தில் இருந்துகொண்டு, பூமியை ஆண்டார். ஒருவர் பின் ஒருவராகத் தனித்தனியே எழுபத்தொரு சதுர்யுகம் அரசியற்றி, நான்கு மனுக்கள் இறந்தார்கள். ஐந்தாமனுவுக்கு மனைவியர் இருவர். அவர்களுள்ளே, மூத்தாளிடத்தில் உடம்பு முழுதுஞ் சிங்கம்போல வெண்ணிறமுடைய சிங்கவன்மன் என்னும் ஒரு குமார

னும் இளையாளிடத்தில் அழகினையுடைய வேதவன்மன் சுமதிவன்மன் என்னும் இரண்டு குமாரர்களும் பிறந்தார்கள்.

சிங்கவன்மனுர், தாம் உடற்குற்றமுடைமையால் இராச்சியத்துக்கு யோக்கியரல்லர் என்றும், தந்தையாராகிய மனுவினது அனுமதியினுலே தம்முடைய தம்பியர் இருவருள் ஒருவர் இராச்சியத்தைப் பெறக்கடவர் என்றும், பூமியெங்குந் திரிந்து சிவதீர்த்த ஸ்நானமுஞ் சிவஸ்தலதரிசனமுஞ் செய்வதே தமக்கு உறுதி என்றுந் தெளிந்து, தந்தையாருக்கு விண்ணப்பஞ் செய்துகொண்டு, கௌடதேசத்தை நீங்கிச் சென்று, காசியை அடைந்து, கங்கையின் மூழ்கி, விசுவேசரைத் தரிசித்தார். பின்பு வங்கதேசத்தையுஞ் சாவகதேசத்தையுங் கடந்து, ஒட்டியதேசத்திற் சென்று, வீமேசரை வணங்கினுர். பின்பு தெலுங்கதேசத்திற் சென்று, ஸ்ரீசைலத்தை வணங்கித், திருக்காளத்தியை அடைந்து நமஸ்கரித்துக்கொண்டு, போயினுர். போகு நாளில், வழியிலே ஒருவேடனைக் கண்டழைத்து, ஒருமரநிழலில் இருத்திக்கொண்டு: "இக்காட்டில் யாது புதுமை உள்ளது?" என்றுவினுவ, வேடன் கும்பிட்டு: "இக்காட்டிலே ஓராற்றங்கரையிலே

ஒருமாமரத்தினடியிலே ஒரு தேவர் இருக்கின்ருர். அவரருகே, ஒரு பச்சைப்பெண் ஒரு பிலத்தின்வழியே வந்து, இரண்டு பொழுதும் அவர் மேலே பூக்களைச் சொரிகின்ருள்'' என்ருன். அது கேட்ட சிங்கவன்மனுர், அவ்வேடன் வழி காட்டச் சென்று, மாவடித்தேவராகிய திருவேகம்பரை அடைந்து, நாடோறும் வணங்கித், தினைமாத்தேன் பழமுதலிய உணவுகளை அவ்வேடன் கொண்டுவந்து தர, வாங்கிப் புசித்துக் கொண்டு இருந்தார். இருக்குநாளிலே, தாந் தென்பூமியெங்கும் யாத்திரை செய்ய விரும்பி, முன்வழிபார்த்தறிந்துகொண்டு வரும்பொருட்டு அவ்வேடனை அனுப்பினுர். அவன்போய்ப் பார்த்துக் கொண்டுவந்து: "தில்லைவனத்திலே ஒரு பொற்ருமரை வாவிக்கரையிலே ஒரு புலியன் நித்திரை செய்துகொண்டிருக்கின்ருன்'' என்று விண்ணப்பஞ்செய்தான்.

அது கேட்ட சிங்கவன்மனுர், அவ்வேடன் வழிகாட்டச் சென்று, தில்லைவனத்தை அடைந்து, சிவகங்கைக்கரையிலே சமாதி பொருந்தி இருந்த வியாக்கிரபாதமுனிவர் திருமுன்சென்று, நமஸ்கரித்து எழுந்து கும்பிட்டுக்கொண்டு நின்ருர். வியாக்கிரபாதமுனிவர், தமது சந்நிதியிலே

நின்றசிங்கவன்மனருடைய வரலாறனைத்தையும் யோகத்தினல் அறிந்து, மகிழ்ந்து: "சிங்கவன் மனே" என்ருர். உடனே சிங்கவன்மனர் விழுந்து நமஸ்கரித்து, எழுந்து, கண்ணீர் ததும்ப நின்ருர். அவரை, வியாக்கிரபாதமுனிவர், தமது திருமுன் அழைத்திருத்திக்கொண்டு: "உன் வரலாறென்னை?" என்று வினவியருளினர். சிங்கவன்மனர் கைதொழுது: "முனிவர்பெருமானே! அடியேன் கௌடேசமனுவின் குமாரன். அடியேனுக்குத் தம்பிமார் இருவர். அடியேன் உமது திருவருளினலே சிவபெருமானைக் குறித்துத் தவஞ்செய்ய வந்தேன்" என்ருர். அதுகேட்ட வியாக்கிரபாதமுனிவர்: "உன் பிதா மிகமுதிர்ந்தவன் இனி அரசாளும் பேறு உன்னுற்பெறற்பாலதாகவும், நீ தவஞ்செய்ய எண்ணும் எண்ணந் தகாது" என்று அருளிச்செய்தார். அதற்குச் சிங்கவன்மனர்: "அடியேனுடைய வடிவம் அரசாளுதற்குரிய வடிவமன்று; ஆதலினல், அடியேனுக்கு அதில் ஆசையில்லை; அடியேனுடைய தந்தையாருக்குப் பின் அடியேனுடைய தம்பிமார் அரசியற்றத்தக்கவர்; அடியேன்முத்தியின்பம் அடையும்பொருட்டு அருள்செய்யும்" என்று விண்ணப்பஞ்செய்தார்.

அப்பொழுது வியாக்கிர பாதமுனிவர்: "இவன், தன்னுடற்குற்ற நீங்கினல், அரசாளுங்கருத்துடையன். நடேசபெருமான் கருணை செய்தாராயின், சிதம்பராலயத் திருப்பணிக்கு இவன் ஆளாவன்" என்று திருவுளங்கொண்டு: "நாம் வரும் வரையும் இங்கே நில்" என்று சிங்கவன்மனைக் கரையிலே நிறுத்திவிட்டுப், பதஞ்சலிமுனிவரிடத்தே போய், அவருக்கு அச்சிங்கவன்மனுடைய வரவைச்சொல்லினர். முனிவர் இருவருங் கூடி வந்து, கனகசபையின் வாயிலிலே நின்று, நிருத்ததரிசனகாலம் வர, உள்ளே புகுந்து, நமஸ்கரித்து: "எம்பெருமானே! கௌடேசகுமாரன் இங்கே வந்து நிற்கின்றான். அவனுக்கு உடற்குற்றத்தை நீக்கித், திருநிருத்தத்தைப் புலப்படுத்தி, அவனை அடிமைகொண்டருளுக" என்று விண்ணப்பஞ்செய்தார்கள். ஆனந்தநடேசர் திருவுளமகிழ்ந்து: "முனிவிர்காள்! நீங்கள் சிங்கவன்மனைப் பொற்றாமரைவாவியிலே ஸ்நானஞ் செய்வித்து, இங்கே அழைத்துக்கொண்டு வாருங்கள்" என்று பணித்தருளினர். உடனே முனிவர் இருவரும் விரைந்துசென்று, சிங்கவன்மனைச் சிவகங்கையிலே ஸ்நானஞ் செய்வித்தார்கள். சிங்கவன்மனர் ஸ்நா

னஞ்செய்து, முன்வடிவநீங்கிப், பொன்வடிவந் தாங்கி, எழுந்து, இரண்ணியவன்மனார் எனப் பெயர் பெற்றார்.

வியாக்கிரபாத முனிவர் இரணியவன்மனா ருக்குத் திருவைந்தெழுத்தை உபதேசித்து, அவரை அழைத்துக்கொண்டு போய்ச், சபைக்கு முன்னே நமஸ்கரிப்பிக்க, ஆனந்தநடேசர் அவ் விரணிய வன்மனாருக்குத் திருநிருத்தத்தைக் காட்டியருளினார். திருநிருத்தந் தரிசித்தவுட னே, இரணியவன்மனார் நெஞ்சநெக்குருக, இர ண்டு கண்களினின்றும் அருவிசொரிய, ஆனந்த பரவசராகி, நடுநடுங்கிப், பூமியின்மேல் விழுந்து நமஸ்கரித்து, எழுந்து, துதிசெய்துகொண்டு நின் றார். சிற்சபேசர் திருவுளமகிழ்ந்து: "இரணிய வன்மனே! நீ நமக்கும், வியாக்கிரபாதனுக்கும், பதஞ்சலிக்கும்,மூவாயிரமுனிவருக்குந் தொண்டு செய்வாயாக" என்று திருவாய்மலர்ந்தருளினார். வியாக்கிரபாத முனிவர் இரணியவன்மனாரை அழைத்துக்கொண்டு போய்த், திருமூலட்டான முடையாரையும், திருப்புலீச்சுரமுடையாரை யும், திருவனந்தேச்சுரமுடையாரையும் வணங் குவித்துக் கொண்டு, தமது பர்ணசாலையை அடைந்து, தம்பத்தினியாரை நோக்கி: "நீ உப

மன்னியுவுக்குப் பின்பு பெருது பெற்ற பிள்ளை இப்பிள்ளை'' என்றார். உடனே இரணியவன்மனார் தாயாருடைய திருவடிகளை வணங்கத், தாயார், அவ்விரணியவன்மனாரைச், சபாநாதர் தமக்குத் தந்தருளிய இரத்தினம் எனக், கைக்கொண்டார். இரணியவன்மனார் நாடோறுஞ் சிவகங்கையிலே ஸ்நானஞ்செய்து, சிவபெருமானைத் தரிசித்து, வியாக்கிரபாதமுனிவருக்கும் பதஞ்சலிமுனிவருக்குந் தொண்டு செய்துகொண்டு இருந்தார்.

இப்படியிருக்குநாளிலே, கௌடேசராகிய மனு, தமதிராச்சியத்தைத் தம்முடைய மூத்த குமாரனாகிய சிங்கவன்மனைக்கொண்டு நடத்துவிக்கும்பொருட்டு வசிட்டமுனிவருக்கு விண்ணப்பஞ்செய்துவிட்டுச், சுவர்க்கத்தை அடைந்தனர். வசிட்டமுனிவர், அம்மனுவின்பொருட்டுச் செயற்பாலனவாகிய கிரியைகளனைத்தையும் இளையகுமாரர்களைக்கொண்டு முற்றுவித்தபின், அவர்கள் வேண்டுகோளின்படி, தென்றிசைநோக்கிச் சென்று, தில்லைவனத்துக்கு வடமேற்றிசையில் உள்ள திருக்களாமரநிழலில் எழுந்தருளியிருக்கும் பிரமபுரீசரை வணங்கினார். அஃதறிந்த வியாக்கிரபாதமுனிவர்: ''நாம் இப்பூசையை

முடித்துக்கொண்டு வருவோம்; நீ முன்னே போ'' என்று பணித்தருள, இரணியவன்மனார், தாம் முன்போய் வசிட்டமுனிவரை வணங்கித், தந்தையார் சுவர்க்கமடைந்தமையை அறிந்து, துக்கமுற்றார். அஃதுணர்ந்த வியாக்கிரமபாத முனிவர் பதஞ்சலிமுனிவர் இருவரும் அங்கு வர, வசிட்டமுனிவர் அவர்களெதிர் சென்றார். இப்படிக் கலந்த மூவருந் தங்களுள்ளே சற்காரஞ் செய்துகொண்டார்கள்.

வியாக்கிரபாதமுனிவர், தம்மை வணங்கிய இரணியவன்மனாரை மனந்தெளிவித்து, வசிட்ட முனிவரை அழைத்துக்கொண்டு சென்று, சிவ கங்கையிலே ஸ்நானஞ் செய்வித்து, நடேசபெரு மானையும் திருமூலட்டானமுடையாரையுந், திருப்புலீச்சுரமுடையாரையுந், திருவனந்தேச்சுரமுடையாரையும் வணங்குவித்துத், தமதாச்சிரமத்தில் அவருக்கு விருந்து செய்தார். மற்றநாள், வசிட்டமுனிவரும் வியாக்கிரபாதமுனிவரும்பதஞ்சலிமுனிவருங் கூடியிருந்தபொழுது, இரணியவன்மனார் வந்து நமஸ்காரஞ்செய்துகொண்டு, அவர்கள் சந்நிதியில் இருந்தார். வசிட்டமுனிவர் வியாக்கிரபாதமுனிவரைநோக்கிச்: "கௌடராசா தன்னிராச்சியத்தை இவ்விரணியவன்ம

னைக்கொண்டே நடத்துவிக்கும் பொருட்டு என்னை வேண்டிக்கொண்டனன். இவனை அழைத்துக்கொண்டு போதற்கே இங்கு வந்தேன்'' என்றார். உடனே வியாக்கிரபாதமுனிவர் இரணியவன்மனாரைநோக்கி: ''உன்கருத்தென்னை?'' என்றார். இரணியவன்மனார் வியாக்கிரபாதமுனிவரை வணங்கி: ''எம்பெருமானே! அடியேன் சிற்சபேசருக்கும் உமக்குஞ் செய்யும் வழிபாட்டையேயன்றிப் பிறிதொன்றையும் விரும்பேன்'' என்று விண்ணப்பஞ்செய்தார். வியாக்கிரபாதமுனிவர்: ''உன்கருத்து இதுவாயின்; நீ வசிட்டமுனிவருடனே அங்கே போய், இராசகிரீடத்தையும், இரத்தினம் பொன் முதலிய திரவியங்களையும், யானை குதிரை தேர் காலாட்களையும், மந்திரிமார்களையுங் கொண்டு சீக்கிரம் வருவாயாக. இங்கே எம்மோடு நிருத்ததரிசனஞ் செய்துகொண்டிருந்த திருவுடையந்தணர் மூவாயிரவர் அந்தர்வேதியில் இருக்கின்றார்கள். நீ வரும்பொழுது அவர்களை அழைத்துக்கொண்டு வருவாயாக'' என்றுபணித்தருளினார்.

இரணியவன்மனார் நடேசபெருமானை வணங்கித் திருவருள் பெற்று, வியாக்கிரபாதமுனிவரையும் அவர் பத்தினியாரையும் பதஞ்சலி

முனிவரையும் வணங்கி விடைகொண்டு, வசிட்ட முனிவரோடு நடந்து, கௌடதேசத்தை அடைந்து, தம்மை வந்தெதிர்கொண்ட தம்பிமார் முதலாயினரோடு நகரத்திற் சென்று, சிலநாள் அங்கிருந்தார். பின்பு தம்பிமார் மந்திரிமார் முதலாயினர்களோடும் புறப்பட்டு, அந்தர்வேதியை அடைந்து, திருவுடையந்தணர்களை வணங்கித், தேர்களின்மேலேற்றிக்கொண்டு, சென்று, தில்லைவனத்தினது திருவெல்லையை அடைந்தார். அடைந்தவுடனே, தாம் விரைந்து சென்று, வியாக்கிரபாத முனிவரையும் பதஞ்சலிமுனிவரையும் வணங்கி, நிகழ்ந்தனவெல்லாம் விண்ணப்பஞ்செய்தார். அம்முனிவரிருவரும் விரைந்து, திருவுடையந்தணர்களை எதிர்கொண்டார்கள்.

திருவுடையந்தணர்கள், தங்கள் தேர்களைக் கனகசபையின் வடமேற்குப் பக்கத்திலே நிறுத்திக்கொண்டு, இறங்கி வந்து, வியாக்கிரபாத முனிவருக்குத் தங்களை எண்ணிக் காட்ட, மூவாயிரர் என்னுந் தொகையிலே ஒருவரை அங்கே காணாது இரணியவன்மனார் திகைத்துநின்றார். அப்பொழுது, எல்லாருங் கேட்கும்படி, சிவபெருமான்: "இவ்வந்தணர்களெல்லாரும் நம்மை

ஒப்பர்கள்; நாம் இவர்களை ஒப்பேம்; நாம் இவர்களுள் ஒருவர்'' என்றருளிச்செய்தார். அது கேட்ட திருவுடையயந்தணர்கள், அஞ்சி நடுநடுங்கித், தங்களுள்ளே தாங்கள் நமஸ்கரித்தெழுந்து, கனகசபையை அடைந்து, நடேசபெருமானை வணங்கிக்கொண்டு, அச்சபையைச் சூழ இருந்தார்கள். இரணியவன்மனார், கனகசபைக்குக் கிழக்குத்திக்கிலே கொற்றவன் குடி என ஒரு நகரஞ் செய்வித்துக்கொண்டு, அங்கே இருந்தார்.

திருச்சிற்றம்பலம்.



## சு. திருவிழாச்சருக்கம்.



சிதம்பரத்திலே, எல்லாரும், நிருத்ததரிசனஞ் செய்துகொண்டு வாழுநாளில் ஒருநாள், நடேசபெருமான் பக்கத்திலே திருக்கூட்டமாகி இருந்தார்கள். அப்பொழுது வியாக்கிரபாதமுனிவர்: "இரணியவன்மன் இப்பூமியை ஆளக்கடவன்; இவன்றம்பிமார்கள் கௌடதேசத்தை ஆளக்கடவர்கள்'' என்றார். அதற்குப் பதஞ்சலிமுனிவரும் வசிட்டமுனிவரும் உபமன்னியுமுனி

வருந் தில்லைவாழந்தணர்களும் மகிழ்ந்து: "அப்படியே ஆகுக" என்றார்கள். வியாக்கிரபாதமுனிவர், இரணியவன்மனை விவாகஞ்செய்வித்து, முடிசூட்டிப், புலிக்கொடிகொடுத்துச், சோழராசாவாக்கினார். இரணியவன்மனுடைய தம்பிமார்கள், விடைபெற்றுக்கொண்டு, நால்வகைச் சேனைகள் சூழச் சென்று, கௌடதேசத்தை அடைந்தார்கள்.

பின்பு, வியாக்கிரபாதமுனிவருடைய அநுஞ்ஞைப்படி, இரணியவன்மனார் நடேசபெருமானுக்குத் திருவம்பலமும், திருமூலட்டானேசுரருக்குத் திருக்கோயிலும், திருமாளிகைகளும், திருமதில்களும், திருக்கோபுரங்களும், பிறவுஞ் செய்வித்தார். திருவீதியிலே தில்லைவாழந்தணர்களுக்குத் திருமாளிகைகள் கட்டுவித்து, அவர்களைக் குடி புகுவித்தார். சிதம்பராலயத்திலே செயற்பாலனவாகிய பூசை திருவிழாமுதலியன செய்தற்பொருட்டு, வேதசிவாகமப்படியே பதஞ்சலி முனிவரைக்கொண்டு ஒருபத்ததி செய்வித்து, அதனை யானைமேலேற்றித் திருக்கோயிலை வலஞ்செய்வித்துக், கனகசபையினுள்ளே பிரவேசிப்பித்தார். பூசை திருவிழா முதலியவற்றிற்கு வேண்டும் நிபந்தங்கள் அமைத்தார்.

நித்தியபூசை, பன்னிரண்டுமாசபூசை, தமனகஞ் சாத்துதல், பவித்திரஞ்சாத்துதல், ஆனியுற்சவம், ஆடிநீர்விளையாட்டுற்சவம், ஐப்பசியுற்சவம், கார்த்திகைத் திருவிளக்கீடு, மார்கழியுற்சவம், தைப்பூசத் திருப்பாவாடை, மாசியுற்சவம் முதலியவைகளெல்லாம் விதிப்படி செய்விப்பாராயினர்.

சபாநடேசருக்கு வருஷந்தோறும் அபிஷேகஞ் செயப்படுந் தினம் ஆறு. அவையாவன:— சித்திரைத் திருவோணம், ஆனித் திருவுத்திரம், மார்கழித் திருவாதிரை, ஆவணிச் சுக்கிலபக்ஷ சதுர்த்தசி, புரட்டாதிச் சுக்கிலபக்ஷ சதுர்த்தசி, மாசிச் சுக்கிலபக்ஷ சதுர்த்தசி என்பனவாம்.

திருச்சிற்றம்பலம்.



## எ. தீர்த்தச்சருக்கம்.



சிதம்பரத்திலே பத்துத் தீர்த்தங்கள் உள்ளன. அவையாவன:—

க. சிவகங்கை—இது கனகசபைக்கு வடக்கே உள்ளது.

உ. குய்யதீர்த்தம்—இது திருக்கோயிலுக்கு வடகிழக்கே உள்ள சமுத்திரத்திற் பாசமறுத்த துறை.

௩. புலிமடு—இது திருக்கோயிலுக்குத் தெற்கே உள்ளது.

௪. வியாக்கிரபாததீர்த்தம்—இது திருக்கோயிலுக்கு மேற்கே திருப்புலீச்சுரத்துக்கு எதிரே உள்ளது. இது இளமைநாயனுர் குளம் எனவும் பெயர் பெறும்.

௫. அனந்ததீர்த்தம்—இது திருக்கோயிலுக்கு மேற்கே திருவனந்தேச்சுரத்துக்கு முன்னுள்ளது.

௬. நாகசேரி—இது திருவனந்தேச்சுரத்துக்கு மேற்கே உள்ளது.

எ. பிரமதீர்த்தம்—இது திருக்கோயிலுக்கு வடமேற்கே திருக்களாஞ்சேரியில் உள்ளது.

அ. சிவப்பிரியை—இது திருக்கோயிலுக்கு வடக்கே பிரமசாமுண்டி கோயிலுக்கு முன்னே உள்ளது.

௯. திருப்பாற்கடல்—இது சிவப்பிரியைக்குத் தென்கிழக்கே உள்ளது.

௧௦. பரமானந்தகூபம்—இது கனகசபைக்குக் கிழக்கே உள்ளது.

சிவகங்கை சிவவடிவம். நாடோறும் நியமமாக அதிலே ஸ்நானஞ்செய்து, சந்தியாவந்தன முதலியன முடிப்பது பெரும்புண்ணியம். அதிலே, மாசப்பிறப்பு, கிருஷ்ணபக்ஷ அட்டமி, கிருஷ்ணபக்ஷ சதுர்த்தசி, அமாவாசை, பௌர்ணிமை, திருவாதிரை, விதிபாதயோகம் என்பவைகளிலே, ஸ்நானஞ் செய்வது விசேடம். வருஷப்பிறப்பு, மார்கழித்திருவாதிரை, மாசித்திருமகம், சூரியகிரகணம், சந்திரகிரகணம், சிவராத்திரி என்பவைகளிலே, ஸ்நானஞ்செய்வது மகாவிசேடம். நடேசதரிசனத்துக்குத் திருவத்தயாமம் உத்தமோத்தம காலமாதல்போலச், சிவகங்காஸ்நானத்துக்கு மாசிமகம் உத்தமோத்தமகாலம். சிவபூசை, சிராத்தம், பிதிர்தர்ப்பணமுதலிய கிரியைகளுக்குச் சிவகங்காதீர்த்தமே உத்தமோத்தமம். சிதம்பரத்தினின்றும் எவ்விடத்துக்காயினும் புறப்படும்பொழுது சிரத்தையோடு சிவகங்கையிலே ஸ்நானஞ்செய்து, அத்தீர்த்தத்

தைப் பானம் பண்ணிக்கொண்டு செல்வோர், தாந்தாம் நினைந்த கருமமெல்லாஞ் சித்திக்கப் பெறுவர்; அவருக்குப், பகைவர் இராக்கதர் பூதம் பேய் விலங்குகளினாலே, துன்பம், விளையாது. எத்தேசத்திருப்பினும், ஆயுண்முடிவிலே, நடேசபெருமானுடைய குஞ்சிதபாதத்தைச் சிந்தித்துச், சிவகங்காதீர்த்தத்தை உட்கொண்டவர் சிவகதியடைவர்.

பரமானந்தகூபஞ் சிவசத்திவடிவம். அதிலே, சுக்கிரவாரம், நவமி என்பவைகளிலே, ஸ்நானஞ் செய்வது விசேடம். ஐப்பசிமாச சுக்கிலபக்ஷநவமி, மாசிமாசசுக்கிலபக்ஷசதுர்த்தசி, சூரியகிரகணம், சந்திரகிரகணம் என்பவைகளிலே, ஸ்நானஞ் செய்வது மகாவிசேடம். பரமானந்தகூபத்திலே ஐப்பசிமாச சுக்கிலபக்ஷ நவமியிலே ஸ்நானஞ் செய்து, அன்றுமுதல் ஒருவருஷகாலம் இடைவிடாது நாடோறும் அத்தீர்த்தத்தில் ஒருழுந்தளவு உட்கொண்டு வருவது உத்தமோத்தமபுண்ணியம்.

ஓரசுரனை வெல்லும்பொருட்டுப் போர்செய்யும் உபாயத்தைக் கற்பிக்கும்படி, குருவானவர் வருணனிடத்துக்கு இருளிலே வந்தார். அவ்வருணன், அக்குருவைப் பகைவன் என்று நினைந்து,

பாசத்தை விடுக்க, அதனால் அக்குரு இறந்தார். அக்கொலைப்பாவங் காரணமாக, அவ்வருணனுக்கு ஒரு பிசாசுவடிவந்தோன்றி, இரண்டு கால்களிலும் இரண்டு கைகளிலும் பொருந்தக் கழுத்தோடு கூடும்படி கட்டிக், கடலினுள் இட்டது. அப்படி இடப்பட்டு நெடுநாள் வருந்திக் கிடந்த வருணனுக்குச், சிவபெருமான், மாசிமகத்தில் வெளிப்பட்டு, அப்பாசக்கட்டு அற்றுப் போகும்படி அருள் செய்தார். அதனால் அத்துறை பாசமறுத்த துறை எனப் பெயர்பெற்றது. அத்துறையிலே மாசிமகத்திலே ஸ்நானஞ் செய்தவர், பாசநீங்கி முத்தி அடையும்பொருட்டு, வருணன் சிவபெருமானிடத்தே வரம்பெற்றான். மகாபாதகனாகிய துர்க்கடன் என்னும் ஒரு செட்டி, பலரோடு படவில் ஏறிக்கொண்டு, மாசிமகத்திலே அப்பாசமறுத்ததுறையில் வரும்பொழுது, படவோடு தாழ்ந்து, முத்தி பெற்றான். சிவபெருமான் மாசிமகந்தோறும் அத்துறையில் எழுந்தருளித் தீர்த்தங் கொடுத்தருளுவர்.

தையமாவாசைதோறுஞ் சிவபெருமான் சிவகங்கைமுதற் பரமானந்தகூபம் இறுதியாகிய பத்துத் தீர்த்தத்தினும் எழுந்தருளித் தீர்த்தங் கொடுத்தருளுவர். அத்தினத்தில், இப்பத்துத்

தீர்த்தத்திலுஞ் சிவபெருமானைச் சேவித்துக் கொண்டு, உடன்சென்று, சிரத்தையோடு ஸ்நானஞ்செய்வது மகாபுண்ணியம்.

திருச்சிற்றம்பலம்.



## ௮. நியமச்சருக்கம்.



சிதம்பரதரிசனஞ் செய்ய விரும்பினவர், தாம் பாவத்துக்குப் பயந்து தருமநெறியாலே தேடிய பொருள்கொண்டு யாத்திரை பண்ணுக. சுபதினத்திலே நித்தியகருமமுடித்து, இயன்றமட்டும் மாகேசுரபூசையும் பிராமணபோசனமும் நடத்திக் கொண்டு, சுபமுகூர்த்தத்திலே புறப்படுக. காமங் கோபமுதலிய குற்றமனைத்துந் தீர்ந்து, நாடோறுஞ் சிவபுராணமுஞ் சைவநூலும் படித்தல் கேட்டல் செய்து, ஒருபொழுது புசிக்க. புசிக்கும்பொழுது வந்த வறியவருக்கு மறுக்காது ஒருபிடியன்னமாயினுங் கொடுத்துப் புசிக்க. வழியில் இடையிடையே நேர்பட்ட சிவாலய விக்கினேசுராலய சுப்பிரமணியாலயங்களைத் தப்பாது அடைந்து, தரிசித்து வணங்கிச் செல்க. இப்படிச் சென்று, சிதம்பரத்தினது திருவெல்லையை அடைந்து, திருக்கோபுரத்தைத்

தூரத்தே கண்டவுடனே, மனமுருகக், கண்ணீர் ததும்ப, உரோமஞ் சிலிர்ப்ப, இரண்டு கைகளை யுஞ் சிரமீது குவித்துப், பூமியில் விழுந்து பல முறை நமஸ்கரித்து, எழுந்து, சிவநாமங்களை உச்சரித்துக்கொண்டு நடக்க. வழியில் இடை யிடையே நமஸ்காரஞ் செய்து தோத்திரம் பண் ணிக்கொண்டு சென்று, சிதம்பரத்தை அடைக.

சிதம்பரத்தை அடைந்தவுடனே, அத்தின த்தில் உணவொழிந்து, க்ஷௌரம் பண்ணுவித் துத், திருக்கோயிலுக்குப் புறத்தே ஸ்நானஞ் செய்து விபூதி தரித்துக்கொண்டு, உள்ளே சென்று சிவகங்கையை அடைந்து, ஆசமனம் பண்ணி, வலக்கை ஆழிவிரலிலே பவித்திரஞ் சேர்த்திச், சற்பிராமணரெதிரே குட்டிக் கும் பிட்டுப் பிராணாயாமமுஞ் சகளீகரணமுஞ்செய்து சங்கற்பஞ் சொல்லி விதிப்படி ஸ்நானம் பண் ணுக. ஸ்நானஞ் செய்தவுடனே, கரையேறி, ஈரந் துவட்டித், தோய்த்துலர்ந்த வஸ்திரம் இரண்டு தரித்துக்கொண்டு, சந்தியாவந்தன முத லியன முடித்து, க்ஷேத்திரபிண்டம் இட்டுச், சிவபத்தியிற் சிறந்த சற்பிராமணருக்குத் தம் மால் இயன்ற தானஞ்செய்து, ஸ்ரீபஞ்சாக்ஷர த்தை நூற்றெட்டுருச் செபிக்க.

அதன்பின், கிழைச் சந்நிதியை அடைந்து, மும்முறை நமஸ்கரித்து எழுந்து, வலஞ்செய்து, முக்குறுணி விநாயகரையும் கற்பகவிநாயகரையும் முருகக்கடவுளையுந் தரிசித்து, வணங்கிக் கொண்டு, திருமூலட்டானத்தை அடைந்து, வலஞ்செய்து, திருமூலட்டானேசுரரையுந் தேவியாரையுந் தக்ஷிணாமூர்த்தியையும் வைரவக்கடவுளையுந் தரிசித்து, மீட்டும் வலஞ்செய்து, சண்டேசுரரைத் தரிசித்துக்கொண்டு சென்று, பேரம்பலத்தையும் நிருத்தசபையையும் தரிசித்துக் கொண்டு, கனகசபையின் சந்நிதியை அடைக.

கனகசபையின் எதிரே பலிபீடத்துக்கு இப்பால் மும்முறை நமஸ்கரித்து, எழுந்து சிரசின்மீது குவித்த கைகளோடு உட்புகுந்து, கனகசபையை வலஞ்செய்து, விநாயகக்கடவுளையுஞ் சுப்பிரமணியக்கடவுளையுந் தரிசித்துச் சந்நிதானத்தை அடைந்து; "என்றுவந்தாய்" என்னுந் திருக்குறிப்போடு நின்றருளிய பெருங்கருணை வெள்ளமாகிய சிற்சபாநாயகரையுஞ் சிவகாமியம்மையாரையும் சிதம்பரரகசியத்தையுந் தரிசித்து, அழலிடைப்பட்ட மெழுகுபோல மனங் கசிந்துருகக், கண்களினின்றும் ஆனந்தவருவி பொழிய, மெய்ம்மயிர் சிலிர்ப்ப, நாத்தழுதழுப்பத், தோத்

திரம் பண்ணி, மீட்டும் வலஞ்செய்து, சண்டே சுரரைத் தரிசித்துக்கொண்டு சந்நிதியை அடைந்து, முன்போல நமஸ்கரித்து இருந்து, ஸ்ரீபஞ்சாக்ஷரத்தை நூற்றெட்டுருச் செபித்துக்கொண்டு எழும்புக.

அதன்பின், அம்மையார் திருக்கோயிலை அடைந்து, சந்நிதியிலே மும்முறை நமஸ்கரித்து, எழுந்து உள்ளேபுகுந்து, மும்முறை வலஞ்செய்து, தரிசித்து, மீட்டும் ஒருமுறை வலஞ்செய்து, சண்டேசுவரியைத் தரிசித்து, சந்நிதியை அடைந்து, நமஸ்காரஞ் செய்துகொண்டிருந்து, தேவி திருமந்திரத்தை நூற்றெட்டுருச் செபித்துக்கொண்டு, எழுந்து திருக்கோயிலெல்லை கடந்து, உறைவிடத்தை அடைக.

அன்றிரவினும் இப்படியே தரிசித்துக்கொண்டு, நித்திரைசெய்து, சூரியோதயத்துக்குமுன் எழுந்து, சிவகங்கையிலே ஸ்நானஞ்செய்து, சற்பிராமணருக்கு இயன்றதானங்கொடுத்து, இயன்றமட்டும் மாகேசுர பூசையும் பிராமணபோசனமும் நடத்திக்கொண்டு, தாம் மௌனத்தோடு போசனம் பண்ணுக.

சிதம்பரத்தில், இப்படியே, ஆயுளெல்லைவரையாயினும், ஒருவருஷமாயினும், ஒருமாச

மாயினும், பதினைந்துநாளாயினும், ஐந்துநாளா யினும், மூன்றுநாளாயினும், நியமத்தோடு, வசிக்க எந்நாளுந் துறவிகளுக்கும் வறியவர் களுக்கும் ஒரு பிடியன்னமாயினுங் கொடுத்தே புசிக்க.

சிவநிந்தை, குருநிந்தை, சிவனடியார்நிந்தை, வேதநிந்தை, சிவாகமநிந்தை, இந்நிந்தைகளைப் பொறுத்தல், சிவத்திரவியத்தைக் குருத்திரவி யத்தைச் சிவனடியார் திரவியத்தைக் கவர்தல், திருக்கோயிலைச் சிவதீர்த்தத்தைத் திருவீதியை த்திருநந்தனவனத்தைத் திருமடத்தை எச்சில் மலசலம் புணர்ச்சி முதலியவைகளால் அசுசிப் படுத்தல், கொலை, களவு, கள்ளுணல், புலாலு ணல், பிறன்மனையாளைப் புணர்தல், வேசியைப் புணர்தல், பொய் பேசல், செய்நன்றி மறத்தல், சூதாடல் முதலியபாவங்களை மறந்துஞ் செய் யாது, சிவத்தியானம், சிவகங்காஸ்நானம், சந்தி யாவந்தனம், சிவபூசை, சிவாலயத்தொண்டு, சிவாலயதரிசனம், வேதபாராயணம், தேவார திருவாசக பாராயணம், சிவபுராணங்கேட்டல், சிவசாத்திரம் படித்தல், குருவாக்கிய பரிபால னம், மாகேசுரபூசை,. திருவீதிப் பிரதக்ஷிணம் முதலிய சிவபுண்ணியங்களை மெய்யன்போடு

நாடோறும் நியமமாகச் செய்துகொண்டு, சிதம்பரத்தில் வசிக்க.

தாந்தாம் முன்செய்த பாவங்களை நினைந்து நினைந்து, நடுநடுங்கி, மனமுருகிக், கண்ணீர்வாரப் பச்சாத்தாபம் அடைந்து, சிவகங்காஸ்நானஞ் சிவதரிசனஞ் சிதம்பரவாச முதலியன செய்தவருக்கு, அப்பாவங்கள் நீங்கும்; பின்பு பாவஞ் செய்யலாகாது. "சிவகங்காஸ்நான முதலியன செய்துகொண்டு நாம் யாது பாவஞ்செய்யினுந் தண்டிக்கப்படேம்" என்று ஒருபொழுதும் ஒரு சிறிதும் எண்ணலாகாது. எண்ணி மீட்டும் பாவஞ்செய்தவருக்கு, அப்பாவம் நீங்காது. சிதம்பரத்தில் இருந்துகொண்டு புண்ணியஞ் செயின், ஒவ்வொரு புண்ணியம் பற்பல புண்ணியமாய் ஓங்கும். அதுபோலவே, அங்கிருந்துகொண்டு பாவஞ் செய்யினும், ஒவ்வொருபாவம் பற்பல பாவமாய் ஓங்கும். ஆயினும், நிருத்ததரிசனஞ் செய்து சிதம்பரத்தில் இருந்துகொண்டு பாவஞ்செய்தவர், இயமனாலே நரகத்திலே தண்டிக்கப்படார்; வைரவக்கடவுளாலே அவர் திருக்கைச் சூலநுனியிலே அநேக கற்பகாலந் தண்டிக்கப்பட்டுப், பின் முத்தியை அடைவர். இருபத்தெட்டுக் கோடி நரகங்களினும் பிரமகற்பங்க

ளெல்லாம் படுந்துன்பம், வைரவக்கடவுளது சூல நுனியில் ஒருகணப்பொழுது படுந்துன்பத்துக் குச் சமமாகாது. ஆதலினாலே, யாவரும், தாந் தாம் மனம் வாக்குக்காயங்களினாலே பாவஞ் செய்யாவண்ணந் தத்தமக்கு அருள் செய்யும் பொருட்டுச் சிவபெருமானைப் பிரார்த்தித்துக் கொண்டு, அவர் திருவருள்வழியே சாவதான மாக ஒழுகுக. இப்படி ஒழுகும் அன்பர்கள், மனம் அறியாமற் செய்த பாவங்கள் சிவகங்கா ஸ்நானத்தினாலும் நிருத்ததரிசனத்தினாலும் நீங் கப்பெற்று, நடேசபெருமானுடைய குஞ்சிதபா தத்தை அடைந்து வாழ்வர்கள்.

திருச்சிற்றம்பலம்.



## கூ. சிவத்துரோகச்சருக்கம்.



சிவநிந்தை, குருநிந்தை, சிவனடியார்நிந் தை, வேதநிந்தை, சிவாகமநிந்தை, சிவத்திர வியாபகார முதலிய சிவத்துரோகங்கள் அதி பாதகம் எனப்படும். இச்சிவத்துரோகங்களுள் ஒன்றுசெய்தவரும், அதற்கு உடன்பட்டவரும், அது செய்வாரைத் தண்டித்தாயினுங் கண்டித் தாயினும் விலக்காது பொறுத்தவரும், அவை

செய்தாரோடு கூடினவரும், இருபத்தெட்டுக் கோடி நரகங்களினும், அளவில்லாத கற்பகாலங் கிடந்து வருந்துவர். சிவத்துரோகத்தை மனம் அறியாமற் செய்யினும், அது, அநுபவத்தாலன்றி, எவ்வகைப்பட்ட பிராயச்சித்தத்தாலுந் தீராது தீராது.

சிவத்திரவியங் காவல்பூண்டவர், அரசாயினும், யாவராயினும், அத்திரவியத்தில் ஓரணுவளவேனுங் கவர்வாராயின், அத்திரவியத்தைக் கவர்ந்த பிறர் அநுபவிக்குந் துன்பத்தினும், நூறுமடங்கு அதிகமாகிய துன்பம் அநுபவிப்பர். ஐம்பொறியடக்கல், சந்தியாவந்தனம், சிவபூசை, சிவாலயதரிசனம், சிவஞானமுதலிய பலவற்றானும் மிகச் சிறந்தவராயினும், ஆகுக; அவர் சிவத்திரவியத்தில் அறியாமையால் ஓரணுவளவு கவரினும், நரகத்தில் வீழ்வது தப்பாது தப்பாது. இதற்கு ஒரு கதை சொல்வோம்.

மேலைச் சமுத்திரதீரத்தின் உள்ள சௌராட்டதேசத்திலே, சோமநாதம் என ஒரு சிவாலயம் உள்ளது. அங்கே கார்த்திகைமாசத்துக் கார்த்திகை நக்ஷத்திரத்திலே திருவிழாநடந்தது. அத்திருவிழாச் சேவிக்கச் சென்றவர்களுள்ளே, சிவசன்மன் சோமசன்மன் என்னும் இரண்டு

பிராமணர்கள், சிவபூசையினுலே மிகமேன்மை படைத்த சிவபத்தர்கள். அன்று சாயங்காலந் திருக்கோயிற் சந்நிதியிலே சனக்கூட்டத்திலே தரிசனஞ் செய்துகொண்டு நின்றபொழுது, சோமசன்மனுடைய சரீரநெருக்கத்தினுலே ஒரு நெய் யகல்விழ்ந்து, திருவிளக்கு அவிந்தது; அவன் அதுகண்டிலன். அருகுநின்ற சிவசன் மன், அதுகண்டும், ஒன்றும் பேசிற்றிலன். திரு விழாமுடிந்தபின், இருவரும் தத்தம் உறைவிட த்தை அடைந்தார்கள்.

சிலநாளாயபின், சோமசன்மனுஞ் சிவசன் மனும், இறந்து, விந்தாடவியென்னும் பெருங் கொடுஞ் சுரத்திலே, பேய்களாகிப், பசி தாகம் வருத்த, உலைந்து திரிந்தார்கள். திருவிளக்கு நெய் கவிழ்த்த அதிபாதகங் காரணமாகச் சோம சன்மனுக்குச், சரீரமெங்கும் புழுக்கள்குடை யச், சிப்பாய, நாற்றிசையினும் மூன்றியோசனை தூரந் திநாற்றம் வீசியது. திருவிளக்குநெய் கவிழ்ந்தமை கண்டும் பேசாதுநின்ற அதிபாத கங் காரணமாகச், சிவசன்மனுக்குக், கண்கள் மலைபோல வளர, நாக்கு மூன்று கூப்பிடுதூரம் நீள, அவைகளின் ஊனைப் பறவைகளும் எறு ம்புகளும் உண்பனவாயின. பேயுருப்பெற்றுரிரு

வரும் அவ்வனத்தில் இவ்வாறு திரியும்பொழுது, வாமதேவமுனிவர் தம்மாணுக்கர்களோடும் அங்கெழுந்தருளினர். அவர் வரவு கண்ட இருவரும், தாங்கள் முன்செய்த சிவபூசாபலத்தினலே: "இவர் சிவபத்தர்" என்று நினைந்து, அவர் திருமுன்சென்று நமஸ்கரித்து, எழுந்து கும்பிட்டுக்கொண்டு நின்றார்கள். வாமதேவமுனிவர் அது கண்டு திருவுளமிரங்கி, நெடுநேரஞ் சிவத்தியானஞ் செய்து, அவர்கள்முன் செய்த சிவத்துரோகத்தை ஞானக்கண்ணினல் அறிந்து, அவர்களை நோக்கித் திருவாய்மலர்ந்தருள்வாராயினர்:—

"நீங்கள் முன்னே பிராமணர்கள். சோமநாதமென்னுஞ் சிவாலயத்திலே திருக்கார்த்திகைத் திருவிழாச் சேவிக்கச் சென்றபொழுது சிவத்துரோகஞ் செய்ததனல், இங்ஙனம் பேய் வடிவம் அடைந்தீர்கள். நீ உன் சரீரத்தினலே திருவிளக்கு நெய்யைக் கவிழ்த்தாய்: அதனல், உன் சரீரமெங்கும் புழுக்கள் குடையச், சீப்பாயத், தீநாற்றம் வீசப்பெற்றாய். நீ திருவிளக்கு நெய்கவிழ்ந்தது கண்டும், பேசாது அயலின் நின்றாய்; அதனல், உன்கண்கள் மலைபோல் வளர, நாக்கு மூன்று கூப்பிடுதூரம் நீள, அவைகளின்

ஊனைப் பறவைகளும் விலங்குகளும் உண்பன வாகப் பெற்றுய். சிவத்துரோகஞ் செய்தவர் தப்ப ஒருவழியும் இல்லை; அவர் அளவில்லாத கற்பகாலம் நரகங்களிலே கிடந்து வருந்துவர். நீங்கள், முன்செய்த சிவத்துரோகத்தினுல், இர ண்டு கற்பகாலம் இங்ஙனந் துன்பமநுபவிப்பீர் கள்; அதன் பின், முன் செய்த சிவபூசையினுலே சோமநாதத்தை அடைந்து வணங்கி, முத்தி அடைவீர்கள். நீங்கள் இப்பொழுது நம்மைத் தரிசித்து வணங்கிய புண்ணியத்தினுல், இம் மையே சிவசிந்தனை பெறுவீர்கள்'' என்று திரு வாய்மலர்ந்து, தமது ஆச்சிரமத்துக்கு எழுந்தரு ளினுர். பேயுருக்கொண்டோர் இருவரும், தாங் கள் செய்த சிவத்துரோகந் தீர்வதொருகாலம் உண்டு என்று தெளிந்து, மகிழ்ந்து, கூத்தாடி னுர்கள்.

வேதசிவாகமங்களை ஓதியுணர்ந்து, நல்லொ ழுக்கத்தின் வழுவாதொழுகி, நாடோறும் நியம மாக மூன்றுகாலமுஞ் சிவபூசை செய்துகொண் டிருந்த பிராமணோத்தமர்களாகிய இவர்களே, ஒரு சிறிது சிவத்துரோகஞ் செய்ததனுல், இத் துணைத்துன்பம் இத்துணைக்காலம் அநுபவித் தார்களாயின், தங்களுக்குந் தங்கள் குடும்பங்

களுக்கும், தங்கள் காமக்கிழத்தியர்களுக்கும், அன்னம் வஸ்திரம் ஆபரணம் முதலியபலவற்றின்பொருட்டும், சிவத்திரவியங்களையே எந்நாளும் உபயோகிப்பவர்கள் படுந்துன்பம் எவ்வளவோ! அஃதொழியுங் காலவரையறை எதுவோ! யாவர் சொல்லவல்லவர்! சிவத்துரோகம் பொல்லாது பொல்லாது!!! இவ்வுண்மையை அறிந்து, எந்நாளுஞ் சிவத்துரோகத்துக்குப் பயந்து, நடுநடுங்கி விலகிச், சாவதானமாக ஒழுகிச், சிவகங்காஸ்நானம், நடேசதரிசனம், சிதம்பரவாசம் முதலியன செய்தவர், நடேசபெருமானுடைய குஞ்சிதபாதத்தை அடைந்து, பேரானந்தப் பெருவாழ்வெய்துவர்.

திருச்சிற்றம்பலம்.



சிதம்பரமான்மியமுற்றுப்பெற்றது.

மெய்கண்டதேவன்றிருவடிவாழ்க.



இதன்கீழ்ச் சுட்டப்படுஞ் சிதம்பரத்துக்குரிய தேவாரப்பதிகங்களையும், திருவாசகப்பதிகங்களையும், திருவிசைப்பாப்பதிகங்களையும், திருப்பல்லாண்டையும் நெட்டுருப்பண்ணிப் பாராயணம் பண்ணுக.

## தே வா ர ம்.

### திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

கற்றாங்கெரி................. குறிஞ்சி.
ஆடினாய்நறுநெய்............ காந்தாரபஞ்சமம்.

### திருநாவுக்கரசுநாயனார்.

பத்தனாய்ப்பாட.............. திருநேரிசை.
செஞ்சடைக்கற்றை.........       ,,
பாளையுடை.................. திருவிருத்தம்.
கருநட்டகண்டனை ..........       ,,
அன்னம்பாலிக்கும்.......... திருக்குறுந்தொகை.
பனைக்கைமும்மத ...........       ,,
அரியானையந்தணர்.......... திருத்தாண்டகம்.
மங்குன்மதி..................       ,,

### சுந்தரமூர்த்திநாயனார்.

மடித்தாடுமடிமை............ குறிஞ்சி.

---

## திருவாசகம்.

கோயின்மூத்ததிருப்பதிகம்
கண்டபத்து

## திருவிசைப்பா.

ஒளிவளர்விளக்கே .............. பஞ்சமம்.
உயர்கொடியாடை .............. ,,
மின்னுருருவ .................... ,,
மாதொரு ......................... ,,

## திருப்பல்லாண்டு.

மன்னுகதில்லை .................. பஞ்சமம்.

